உ

ஸ்ரீ-கிருஷ்ணாய பரப்பிரமணே நம:

திருவேங்கடநாதரருளிச்செய்த

# கீதாசாரத் தாலாட்டு.

மூலமும்

மடப்புரம், ஆ. செ. துரைசாமிநாயக்கர்
அவர்கள் வேண்டுகோளின்படி

பிரமானந்த சாகரசொரூபராகிய
ஸ்ரீ கோயிலூர்ச் சிதம்பர சுவாமிகள்
மாணாக்கராயும்,
திருவாரூரைச் சேர்ந்த வன்மீகபுரத்திலெழுந்தருளிய
ஸ்ரீ குருதக்ஷிணாமூர்த்தி சுவாமிகள்
ஆதீனத்திருந்தவராயுமுள்ள,
மதுரை

## சிவானந்தசுவாமிகளியற்றிய

## உரையும்.

—— o ——

இச்சுவாமிகள் மாணாக்கராகிய,
நாகப்பட்டணம் ரெயில்வே ஸ்டேஷன்மாஸ்டர்
திரிசிரபுரம், தி. சண்முகம்பிள்ளையவர்களால்
மகாராணியவர்கள் கைத்தொழிற்பாடசாலை அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

விகுருதி௵-தைமீ
1891.

(இ-ள்)

∴ மாதையர்-மாதையப் பதியிலுள்ளவர்களுக்கு, கோன்-அரசனாகிய, *வேதநவில-வேதாத்தியயனம் பண்ணுகின்ற, வாய்-வாக்கினையுடைய, வெங்கடநாதன்-திருவெங்கடநாதனென்னும்பிராமண சிரேஷ்டரானவர், காதையுற-சொற் சுவைபொருந்த, பார்த்தனுக்கு-அருச்சுனனுக்கு, கண்ணன் - ஸ்ரீ கிருஷ்ண பகவான், அருள்-அனுக்கிரகம் பண்ணிய, கீதை-பகவற்கீதையினது, கருத்து-தாற்பரியமாகிய (அர்த்தங்களை), உயர் † தாலாட்டாக-மேன்மைபொருந்திய தாலாட்டுப்பிரபந்தமாக, ‡யாரும்-சருவத்திராகளும், கருத்துயர்ந்து-ஞானமதுக்கொண்டு நீங்கப்பெற்று, கதி-மோக்ஷத்தை, எய்த-அடையும் பொருட்டு, கட்டுரைத்தான்-உறுதிமொழியாகக்கூறினார் (என்று)

*வேதநவில்வாயவெங்கடநாதனென்றமையின் வேதாத்தியனஞ்செய்தல் பிராமணர்க்கேமிகவுமுரித்தென்பதுபற்றி யுயர்ந்த பிராமணனென விரித்தெழுதினாம்.

†பதினெட்டத்தியாயங்களாற் கன்மம், பத்தி-ஞானார்த்தங்களை மிச்சிரமாய்க்கூறியுள்ள பகவற்கீதையின்கண்-கருப்பிணியின் றுமிரசத்தைக் கிரகித்தல்போல அந்தரங்கமான ஞானார்த்தங்களைச்சங்கிரகித்துத் தாலாட்டுப்பிரபந்தமாகக்கூறினமையின் இது ஸ்ரீதாசாரததாலாட்டெனும் பெயருடைத்தாயிற்று.

‡தீவிரதர அதிகாரிகட்குப் பயன்படுதலுமன்றி மந்தாதிகாரிகட்குமினிதுவிளங்கிப் பயன்படுமென்பது தோன்ற-யாருமென்றார்.

∴ மாதைப்பதியென்பதைச்சிலர் மாதேவிப்பட்டணமென்றும் சிலர் திருவாமாத்தூரென்றுங் கூறுவர்கள்



# நூல்

சீராரும்பரமாத்தத்தெரிசனத்தையருள்செய்ய .. ப
பேராருந்தேசிகராயப்பெருமானே வந்தவரோ ... (க)

இ-ள்.

(a.) பெருமானே- (ஸ்ரீபகவானாகிய எமது)பிரானே, சீராரும்-சச்சிதானந்த கனமாகிய) சிறப்பினைப் பொருந்திய, பரமாத்ததெரிசனத்தை - எதார்த்தமாயுள்ள ஆத்மதரிசனத்தை, அருள்செய்ய - அருச்சுனனுக்கு அனுக்கிரகஞ்செய்யும் பொருட்டு, *பேராரும்-பெருமை நிறைந்துள்ள, தேசிகராய்-ஞானாசாரியராக, b. வந்தவரோ—எழுந்தருளி வந்தவரோநீர், (எறு)

a. பெருமானேயென்பது விளி

b. வந்தவரோவெனச்செய்யுளினிறுதியிலுள்ள - ஓகாரம்வியப்புப் பொருளது-நன்னூல் - இடையியலில்-இரண்டாஞ்சூத்திரம்-இன்னன வென்றதனுள்—பின்வருவனவுமிவ்வாறே.

*சிருட்டியாதி பஞ்சகிருத்தியங்களில் சிருட்டி, திதி, சம்ஹார, திரோபவமென்னு நான்கினுஞ் சமமாராய்ந்துக நிவர்த்தியாக அனுக்கிரகமொன்றினுள் மாத்திர நிவிர்த்திய கின்றமையா லனுக்கிரகமொன்றுமே பெருமையுடைத் தென்பது கூறுமேயமைப்ப அவ்வனுக்கிரகத்தைக் குருமூர்த்தமாகவேயிருந்து செய்வதும் பா யிருத்தலின் குருமூர்த்தியே பெருமையுடையாரென்பது தோன்றப், பேராருந்தேசிகராயென்றார்.

---

திருத்தேரிற்சாரதியாய்ச்சேர்ந்திருந்துங்கீதையி று
லருச்சுனற்குமெய்ஞ்ஞானமனைத்துமுரைசெய்தவரோ (உ)

இ-ள்.

*திருத்தேரில்-சிறப்புப்பொருந்திய இரதத்தில், சாரதியாய - தேர்ப்பாகராய், †சேர்ந்திருந்தும் - பொருந்தியிருந்

னொருகையிற் கசை குசைபிடித்தொருகையிற் சின்முத்திரை கொண்டிருந்துப தேசித்தமையால் போதிருந்தும் என அவ்வுண்மை டுணர்த்தாரென்றுணர்க.

∴ மாயென்பது தோன்றுமெ ாட்டு வழங்குமுறைமை

‡ பரோக்ஷஞானம்-அபரோக்ஷஞானமென ஞானமிரண்டாம் அவற்றுள் அபரோக்ஷஞானமானது-அகண்டாபரோக்ஷஞானமெனவும்-கண்டாபரோக்ஷஞானமெனவு மிருவகைப்படுமிவை முழுமுமுபதேசித்தாரென்பது தோன்ற மெய்ஞ்ஞானமளித்ததுமென்று

செஞ்சமரிற் பாண்டவரும் செய்முறையென்றிரங்கி .. ஞ
யஞ்சியபார்த்தனையப்பாலாக்கத்தருளாலேநோக்கி .. (௫)

## இ-ள்

* செஞ்சமரில்-செவ்வியதாகிய யுத்தத்தில், பாண்டவரும்-உறவினர்களாகிய யாவர்களும், செய்முறை யென்றிரங்கி-நாசமடைவார்களென்றிரக்கமுற்று, † அஞ்சியபார்த்தன்-பயந்துள்ள அர்ச்சுனனது, பயம்-பீதியை, அந்த-அந்த யுத்தங் களம் நடுநியிற்றனே, அகற்ற-நிவிர்த்தி செய்தற்கு, ‡ அருளால்-கிருபையோடு, § நோக்கி-பார்த்து, (எ-று)

* பாண்டவர்கள் செய்யுஞ் சமர் தர்மசாஸ்திரத்தை யனுசரித்ததா கலின் செஞ்சமரென்றார்.—

† நம்குருவாகிய துரோணர், கிருபர் முதலியவர்களும் நம்குலத்தி லுதித்த பீஷ்மர் துரியோதனாதியருமிவர்கட்குச் சபலராக வந்த கன்னன் பரசனர்கள், பல மற்றைத்தேசத்தரசர்களும் தங்கள் தங்களுக குரியசுகபோகங்களை யிழந்து யுத்தகளத்தினம்மால் மரணமடை வார்களே-மரணமடைந்தாலிவர்கள் விரட்சிக்கப்பட்டுள்ள யாவர் களுந் துன்பமுறுவதுமன்றி யிவர்களாற் செய்யப்பட்டுவருகிற குல தருமங்களும் நாசமடையும் அவை நாசமடையவே குலங்கள் முழுது மதன்மத்திற் பிரவர்த்திக்கும் அதனால் ஸ்திரிகள் நெறிதவறுவார்கள் அதனால் வர்ணசங்கரமாகும் அதனாலிவர்கள் நரகமடைவதுமல்லாம

வோர்களின் பிதிர்கணங்களும் பிண்டோதகங்களாற் செய்யப்படும் பிராத்தருப்பணாதிகளா லுண்டாகும் பலனை யிழந்து துன்பமுறு வார்கள் இவைகளனைத்திற்கு நாமே காரணமாதலின் நம்மைக் குல க்ஷய இருததோடம் வந்தடைந்து நரகிலமிழ்த்துமென்றச்சமுற்றவ ருச்சுனனென்றார் அஞ்சிய பார்த்தனென்றார்.

§அருச்சுனன் மோகத்தாலடைந்துள்ள பயம் நீங்கியாத்மஞான பரனாய்ச் சுதர்மங்களைச் செய்துவரு நிமித்தந் திக்ஷாக்கிரமமாக அருச்சுனன்மீது பகவான் பூரண திருஷ்டியைத் தமைத்தோன்ற நோக்கியென்றார்.

‡பகவான் தனக்கேதேனுமோர் பிரதியுபகாரங்களை யபேக்ஷியா துரைக்கிறானென்பதுவிளங்க அருளால்நோக்கியென்றார்.

சுற்றமறிற்சோகமெனச் சொல்லினைக் கற்றறிந்தவன் போற
கற்றுணர்ந்தபேர் தனாற் கலங்காரகாணென்றவரோ (ச)

இ-ள்.

சுற்றமறில-பந்துவர்க்கங் கெடுசயமடையுமானால், சோக மென-துக்கம (வந்துபொருந்து)மென்று, *சற்றறிந்தவன் போல-இருசித்துச சாஸ்திரந்தெரிந்தவன்போல, சொல லினை-கூறினாய், கற்று-(கற்கவேண்டியசாஸ்திரங்களைக்)கற் று, உணர்ந்தபேர்-(அறியவேண்டியவைகளை)யறிந்தமகான் கள், அதனால்-பந்துவர்க்கங்கட்குநேரிடுங்கேடியினால், †கல ங்கார-கலக்கமடையார்கள், காணென்றவரோ-அதனை நீ அறிவாயாகவென்று கூறியருளியவரோநீர் (எ-று)

*தன்னுடைய தேகாதிகட்கு நேரிடுங்கேடுகள் பற்றியே தனக் கெடுங்கேடியும் வாராதென்பது சுருதியுத்தி யனுபவங்களுக்கொ த்த துணிபாயிருக்க அன்னியர் தேகாதிகட்கு நேரிடுங்கேடுகள் பற்றித்தனக்குங்கேடுகள் நேரிடுமென்னும்பாமரகாரியங்களாகிய தேகாதிகட்கும் அறிவுசொரூபமாகிய ஆத்மாவிற்கும் தாதாத்மிய மில்லாதொருசம்பந்தமுமின்றென்றும் க்ஷத்திரியர்கட்குத் துட்டநிக்கிர கஞ் சபதபகாத்தனிப்பதுவிடாச் சுயதர்மங்களைக் கைவிடுதல் பாவமென

வும் அருச்சுனன் மோகத்தாலற்பமேனுமறியாமல் துட்டர்களாகிய குரியோத்ருஹியரைக்கொல்வது பாவமெனவும் அப்பாவத்தாற்றுன்பம் வருமெனவுங் கூறினமைபாற் சற்றுமறியாதவனென்பது தோன்றச் சற்றறிந்தவன்போலென்றார்.

†ஓரவத்தை மற்றோரவத்தையினிலைபெறாது கெடுதலையுறுகின்றமையின் அவத்தாத்ரயப் பிரபஞ்சங்களனைத்தும் எந்தவேதுக்களினாலு நிலைபெறாதழியத்தக்கனவெனவும் சுத்திகாரசிதங்களாற்சலம்போல் மித்தையெனவும் ஆத்மா அவத்தாத்திரயங்களாலேயொன்று நிலைபெறாதுகெடுதலையுறினும் தான்கெடுதலுறாமலவைகளைச் சாட்சிமாத்திரமாகவிகாரமின்றியறிந்து கொண்டிருத்தலினாலெக்காலத்திலும்எந்தவேதுக்களினாலுமழிவையுறாது நித்தியமாயிருக்கத்தக்க சத்தியப்பொருளெனவும் சுருதி-யுத்தியனுபவங்களாலறிந்த பெரியோர்கள் தேகாதிப்பிரபஞ்சங்கட்கு நேரிடுங்கேடுகளைக்குறித்துக் கலக்கமுறார்களானமையின் கற்றுணர்ந்தபேரறிஞரும் கலங்காரென்றார்.

---

கலங்காரோ விறப்புவரிற் கற்றுணர்ந்தபேரோர் ... ௰
மலங்காமனிருக்குமவகையுரையுமெனவினவ ... (௩)

## இ-ள்.

இறப்புவரில்-மரணம் வந்தகாலத்து, கற்று-கற்கவேண்டியவைகளைக் கற்று, உணர்ந்தபேரோரும், அறியவேண்டியவைகளை யறிந்த மகான்களாயினும், கலங்காரோ-கலக்கமுறார்களோ—(கலக்கமுற்றிருப்பார்களாகி லவர்களைப்போல) நான-யானும், மலங்காமல் மயக்கமுறாமல், இருக்குமவகை-இருக்கத்தக்காரிய வுபாயங்களை, உரையுமென விளவ-அடியேனுக்கனுக்கிரகம் பண்ணுமென றருச்சுனன் கேட்க,-என்று).
நான, என்பதில இறந்தது தழுவிய எச்சவும்மையிகாரத்தாற்றொக்கது.

னை சரீரத்தைத்; அடுத்தபொறி — பொருந்தியவித்தியாம *நித்தியமாகிய-(ஞானிகளைமறித்தலின்றி நித்தியமாயுள்ள; ஆன்மா-ஆன்மாவே, நின்சொரூப மென்றவரோ - உனது சொரூபமென்று கூறியருளியவரோ நீர்-(எ-று)
ஆன்மா என்பதில் பிரிநிலை ஏகாரம் விகாரத்தாற்றொக்கது.

*பிராகபாவம் பிரத்தொம்சாபாவம் அன்னியோன்னியாபாவம்-அத்தியந்தாபாவமென்னு நான்கு கடாவமுமின்றிச்சதா தப்பாயிருப்பதெதுவோ அது நித்தியம நித்தியமாயுள்ள ஆன்மாவே நானெனும்விசாரமறியவிருப்பில் எமதுகருணைக்கடலென்னும் பிரமானந்த சாகரசொரூபராகிய கோவிலூராச்சிதம்பரசுவாமிகள்செய்தருளிய இலக்கணவிருத்தியிற்காண்க-

---

அங்கமுயிரிந்தியநானன்றிவேறெனக்கா னெ
னிங்கியானவேறுண்டேலெனக்கறியப்புகலுமென (௯)

இ-ள்.

அங்கம்-சரீரமும்; உயிர்-பிராணனும்; இந்திரியம்-இந்திரியங்களும்; நானன்றி-யானென்றறிந்துள்ளேனல்லாமல்; வேறு-இவைகளுக்கன்னியமாக; எனக்கானென்னை எனது சொரூபத்தைக்கண்டிலேன்; இங்கு-இச்சரீரங்களினிடமாக ; யானவேறுண்டேல - எனது சொரூபமிவைகட்கன்னியமாயிருக்குமேயாகில், எனக்கறியப்புகலுமென-அடியேனுக்குத் தெரிந்துகொள்ளும்படி யநுக்கிரகஞ் செய்தருளவேண்டுமென்று குருசுவாமிகேட்க-;(எ-று)
அங்கம்- உயிர்-பிராணன் - இந்திரியம்-ஆகிய இவைகளில் எண்ணும்மைகள் தொக்கன

மெய்யுயிரிந்தியங்களல்லாவேறறியேனென்றவனு ம
மெய்யாவவையாலறியப்படானுநீயென்றவரோ (௰)

## இ-ள்.

* பைய-இரகசியமாக; மெய-சரீரமும்; உயிர-பிராணனும் இந்திரியங்களல்லால-இந்திரியங்களுமாகிய (விவைகளேயே நானென்றறிந்திருக்கிறனே)யல்லாமல; வேறு-இவைகட்கன்னியமாக; அறியேனென்றவனும்-(எனது சொரூபத்தை) கண்டிலேனென(றவைகளே விஷயமா யறிந்தவறிவாயிருந்து) கூறியவனும; †அவையால-முற்சொல்லிய சரீரங்களால்; அறியப்படாதும-அறிதற்கு விடயமாகாதிருப்பவனும (ஆகிய பிரத்தியகாத்மசொரூபமே); நீயென்றவரோ-உனது சொரூபமென்றநுக்கிரகஞ் செய்தருளியவரோ நீர்; (எ-று).

*ஞானத்துக்கதிகாரமின்றிய துரியோதனாதியர் பலருநிறைந்துள்ள யுத்தகளமத்தியிற் சரீரத்தினும் விலக்ஷணமாயுமவைகட்கோதாரமாயுமிராநின்றபிரத்தியகாத்மசொரூபமேயுனது சொரூபமென்றுபதேசிக்குமகாவாக்கியமானது அருச்சுனன் செவிக்குமாத்திரமன்றி மற்றயாசெவிக்குப்புலப்படாதிருந்தற்குப பகவானிரகசியமாக வுபதேசித்தாரென்பது தோன்றப்பையவென்றார்.

† அவையாலறியப்படான், எனபகவான் கூறியிருப்பதுபோலவேபிரமகீதை-௬-வது சேர்ந்தபடார்த்தமுணர்த்தஅத்தியாயத்தில்-"வாக்குமனங்களை செவியான், மன்னின்றபிராணனிலுனீக்கியுள்கரணத்தானின் மலன்கோசரிக்கவுமான்," எனக் கூறியிருப்பதுகாண்க.

——.

தேகமே வேறு இல்லைத் தசை சேர்ந்த திவனே தேனை வே
சோகமே விளைக்கும் தொடாசியினுலென்றவரோ (௰௩)

## இ-ள்.

தேகமே வேறு இல்-சரீரமானமாவுக்கன்னியமானால அதை-அச்சரீரத்தினை; இவனா-இவ்வானமாவானவன; சேர்ந்தது பொருந்தியது; ஏதெனவே-ஏதனாலென்றருச்சுனன்கேட்க,

போகருமத்துக்குச் சரீரமுஞ் சரீரத்துக்குக் கருமமுங் காரணமானமையின் கருமஞ்செய்யலாகக்கூடும்) என்றவரோ-என்று கூறியருளியவரோவீர,(எ-று).
தாஷ்டாந்தம்-எருசி னின்றதாலவருவித்ததாம்

*மரமென்றுளதோ அன்றேவித்தும் காரணாத்மகமாக மரத்தினும் வித்தென்றுளதோ அன்றேமரமுங் காரணாத்மகமாக வித்தினும், அடங்கியிருப்பதனால் ஏகமாமரமும் வித்துமென்றார்.

---

காயமுந்தானும்பிறிதேற்கன்மமெவர்செய்ததென ந
தீயவுடற்கலந்துகன்மஞ்செய்தானென்கைக்கேதென்றவரோ (௰௩)

இ-ள்.

காயமும்-சரீரமும், தானும்-ஆன்மாவும், பிறிதேல்-வேறுவேறுமானால், கன்மம்-விதிக்கப்பட்டதாகிய கன்மங்களை, எவர் செய்ததென்று-யாவர்செய்ததென்றருச்சுனன் கேட்க, கன்மஞ்செயல்-கன்மத்தைச்செய்யுஞ்செயலானது, *தீயவுடற்கலந்து-கொடிதாகியசரீரத்துக்கேயல்லாமல், தனக்கேதென்றவரோ-ஆத்மாவுக்கில்லையென்று கூறியருளியவரோவீர, (எ-று).

*சரீரத்துக்குச் சந்தனதிலதமுதலிய வஸ்துக்களைத் தீண்டுதல்களால் ஸ்நானஞ்செய்வித்தல் திருமஞ்சனம், விருந்து, சந்தனஞ்சாற்றல் வஸ்திர பூஷணங்களாலலங்கரித்தல் பால், தயிர் நெய்யாற்சமைக்கப்பட்டனவாகிய வுணவுகளைக் காலந்தவறாதளித்தலாகிய விவைகளோடின்னும் வேண்டியபடியுபசரித்தும் சரீரமானது பலவாயதுன்பமெனுஞ் சுகங்கட்கேதுவாகாமற்றுக்கத்திற்கேயேதுவாயிருத்தலாற் சரீரங்கொடிதென்பது தோன்றத் தீயவுடலென்றார்.

---

படர்கருமமுடல்செய்யிற்பலமுறுவதாரக்கென வே
யடாபலமுமுடற்கேயாமறிவார்க்கேதென்றவரோ (௰௪)

இ-ள்.

படர்கருமம்-(நித்திய, நைமித்திய, காமிய, பிராயச்சித்த மெனவிரிந்துள்ள)கருமங்களை, உடலெய்யில-சரீரஞ்செய் யுமானால், பன்முறுவது-கன்மபலம்வந்து பொருந்துவது, யாருக்கெனவே -எவர்க்கென்றருச்சுனன்கேட்க, அடாப்பல மும்-கன்மத்தால் வந்துபொருந்திய புண்ணியபாவமாகியப லன்களும், உடற்கேயாம்-சரீரத்துக்கேயாகும், *அறிவார்க்கு - சாக்ஷிமாத்திரமாக அறிந்துகொண்டிராநின்றவான் மாவுக்கு, ஏதென்றவரோ-இல்லையென்று கூறியருளியவ ரோ நீர், (எ-று).

*கடசராதிகளைச் செய்வதினால் வருமிலாபங்கள் அவை களைச்செய்யுங்குலாலனையடையுமே யல்லாமல் குலாலனை யுங் குலாலனாற் செய்யப்படுவதாகிய கடசராதிகளையும் விநோதமாகப் பார்த்துக்கொண்டிராநின்றவர்களை யடை யாதன்போல கன்மங்களைச்செய்வதினால் வரும்பிரயோச னங்கள் கன்மங்களைச் செய்வதாகிய சரீரத்தையடையுமே யல்லாமற் சரீரத்தையும் சரீரத்தாற் செய்யப்படுவதாகிய கன்மங்களையும் சாக்ஷிமாத்திரமாக அறிந்துகொண்டிரா நின்ற ஆன்மாவையடையாவென்பது சுருதியுத்தியனுபவ ங்களுக்கொத்த துணிபாதலால் அறிவார்க்கு ஏதென்றார்.

---

வெய்யவினையுடற்கென்றான்மெய்யிங்கேவிழவான் மா
வையமறநரகசொற்கமனுபவிப்பதேதெனவே (௰௫)

இ-ள்.

(1) வெய்யவினை-கொடிதாகிய கன்மபலமானது, உடற் கென்றால்-சரீரத்துக்கென்று சொல்லுவீரானால், மெய்-சரீ ரமானது, இங்கே-இப்பூமியின்கண்ணே, விழ-மரணமாகி வீழ்ந்தபின்னர், ஆன்மா-(சேடித்திராநின்ற) ஆன்மாவா னது, ஐயமற-சந்தேகமின்றி, நரகசொற்கமனுபவிப்பது-நரக

சொர்க்கங்களை யனுபவிப்பதெனச்சிலர் கூறுவது, ஏதென வே-என்றனனென்றருச்சுனன் கேட்க,(எ-று) (1) வினா-என்க காரியத்தைக் காரணமாகவுபசரித்தார்

---

அனுபவமேயிலையதுவீறாரோபிதநிகழ்ந்தி ற்
றனுகரணச்செய்தன்தாயச்சாவதுபோலென்றவ ரோ
(௰௬)

இ-ள்.

அனுபவமேயிலை-ஆன்மாவுக்கு நரகசொர்க்கானுபவமேயில்லை, அது ஆன்மாவுக்கு நரக சொர்க்கானுபவமுண்டென்பதை, நிகழ்ந்திற்-சொல்லப்புகின், அனுகரணச்செயல்-தேகேந்திரியாதிகளின்செயலானது, தன்றாய-தனதுசெயலாக, சாவதுபோல-பொருந்துவதுபோல, வீறாரோபிதம்-வியாத்தமாகிய (1) அத்தியாசமேயாகும், என்றவரோ-என்று கூறியருளியவரோ நீர்,(எ-று)

(1) தன்றபாவாதி கரணத்திற்றன் தவபாசம் அத்தியாசமாம்-அல்லது அதிட்டானந்தனையிலும் விஷமசத்தையுடைய தின்னவபாசம் அத்தியாசமாம்-அல்லது பிராந்திஞானத்திற்கு விஷயமாயுள்ள மித்தையாவஸ்து மற்றும் பிராந்திஞானமிவையின் பெயர் அத்தியாசமாம்-இவ்வத்தியாசங்களின் பேதங்களை அறியவிரும்பில் ஞானவிதியாசகர சொரூபராகிய கோவிலூர்ப்பொன்னம்பலசுவாமிகள் கைவல்லிய நவநீதத்திற்கியற்றிய தத்துவார்த்ததீபமென்னு முரைப்பிரசங்கத்திற்காண்க. அதிகரணம்-இடம்-அவபாசம்-தோற்றரவு-விஷமசத்தை-சமமல்லாத சத்தை

---

மற்றுடலின்செய்கைதன்மேல்வருமயக்கமேதென வே
முற்றுணர்வொன்றில்லாதமோகமென்றுசொன்னவ ரோ
(௰௭)

இ-ள்.

மற்றுடலினை (ஆன்மாவாக)க்கண்ணியமாயுள்ள சரீரத்தினது செய்கை-பருத்தல் இளைத்தல் முதலிய செயல்கள், தன்மேல ஆத்மாவாகிய உன்பேரில, வருமயக்கமேதெனவே-நான் பருத்தேன் இளைத்தேனென்னவருகின்ற அத்தியாசத்திற்கு (காரணம்) யாதென்றருச்சுனன்கேட்க, முற்றுணர்வு பூரணஞானமானது, ஒன்று-பொருந்துதல, இல்லாத-இன்றிய, மோகமென்று-அஞ்ஞானமே (காரண) மென்று, சொன்னவரோ கூறியருளியவரோ நீர்-, (எ-று) இங்கே ஒன்று என்பது முதனிலைத்தொழிற்பெயர்.

---

அறிவுதேகந்தனக்கோவான்மாவிற்கோவெ வெ
பிறிவுசெயிலசித்துடலம்பிரமமறிவென்றவரோ (௰௮)

இ-ள்.

அறிவுதேகந்தனக்கோ-சித்திலக்கணம் சரீரத்துக்கோ-ஆன்மாவிற்கோ-ஆன்மாவிற்குக்கோ, எனவே-என்றருச்சுனன் கேட்க, பிறிவுசெயில-(சரீரவிலக்கணத்தையும் ஆன்மவிலக்கணத்தையும் வேறு) பிரித்துப்பார்க்குமிடத்து, அசித்துடலம்-சரீரஞ்சடவிலக்கணத்தையுடையது, பிரமமறிவென்றவரோ - பிரமமே சித்திலக்கணத்தையுடையதென்று கூறியருளியவரோ நீர், (எ-று).

தேகமசித்தாகிலிந்தச்செயலவருவதேதென வெ
வேகபாருசோதியினைமுன்னிருக்கையிற்றலென்றவ ரோ
(௰௯)

இ-ள்.

தேகமசித்தாகில-சரீரஞ்சடமாயின், இந்தச்செயல்வருவது (சரீரத்துக்குக் கன்மங்களைச்செய்வதான) இச்செயலவராகின்றது, ஏதெனவே-யாதினாலென்றருச்சுனன்கேட்க, ஏக

பரம்-ஒன்றாகவும் உயர்வாகவுமுள்ள,சோதியின்முன்-சை
தன்னியத்தின் சன்னிதானம்பற்றி, இருக்கையிறைலென்ற
வரோ-இருக்கின்றமையால் (தேகத்திறகுக்கன்மச் செயல்
வரக்கூடு)மென்று கூறியருளியவரோநீா—(எ-று)

---

இருக்கினுமசேதனத்துக்கிச்செயலுண்டோவென வே
யுருக்குபடாக்காந்தமுன்னிலூசிகிகரென்றவரோ (உ௰)

இ - ள்.

இருக்கினும்-(சைதன்னியத்தின் சன்னிதானம்பற்றி)யிருந
தாலும, அசேதனததுககு-சடமாயுள்ள (சரீரததுக்கு),
இச்செயலுண்டோ-இக்கன்மாதிகளைச் செய்யத்தகக செய
லுணடாகுமோ, எனவே-என்றருசசுனனகேட்க, உருக்கு
படா-அக்கினியினலுருககபபடாத, காநதமுன்னில-காநத
சன்னிதானத்திலுள்ள, ஊசிகா-ஊசிககுககமபிக்குஞ்செ
யலுண்டாதல்போல, என்றவரோ-ஆனம சன்னிதானத்தி
ாாகின்ற சரீரத்திற்குக கன்மசசெயல வரககூடுமென்று
கூறியருளியவரோநீர்-(எ-று.)
தாஷ்டாநதம-எஞசிநின்றதால் வருவித்தாம்

---

சொன்னசெயலுடற்கானற்சுகதுக்கம்யார்க்கென வே
அன்னசுகதுக்கமுந்தானவ்வுடற்கேயெனறவரோ (உக)

இ - ள்.

சொன்னசெயல்-(தேவரீர்) கூறியகன்மச்செயலான்து, உ
டற்கானல்-சரீரத்துக்கென்று சொல்லுவீராகில், சுகதுக
கம்-(கன்மபலமாகிய) சுகதுக்கங்கள், யார்க்கெனவே-எவ
ர்களுக்கென்றருச்சுனன்கேட்க, அன்னசுகதுக்கமும்-அத்
தன்மையாகிய சுகதுக்கங்களும், அவ்வுடற்கேயெனறவ
ரோ-முற்கூறியசரீரத்துக்கேயென்று கூறியருளியவரோ
நீா-(எ-று) *தான்-அசை

சேதனமாமான்மாவைச்சேராததுக்கசு க
மோதுசடமாமுடலையுற்றிடுமோசொல்லுமென (௨௨)

இ-ள்.

சேதனமாமான்மாவை-சித்துருவமாகிய வான்மாவை, சேராததுக்கசுகம்-பொருந்தாத சுகதுக்கங்களானவை, ஓது (இழிவுடையதாகக்) கூறப்பட்ட, சடமாமுடலை-அசேதனமாயுள்ள சரீரத்தை, * உற்றிடுமோ - பொருந்துமோ, சொல்லுமென-(தேவரீர்) கூறியருள வேண்டுமென்றருச்சுனன்கேட்க,(எ-று).

* ஒருவன்வாளினால மற்றொருவனைக்கொலை செய்யில் அக்கொலையினாலுண்டாகிய தண்டனையானது சேதனனாயுள்ள புருடனைச்சாருமேயன்றிய சேதனமாயுள்ள வாளினைச்சாராததுபோல ஆன்மாசரீரத்தாற் கன்மங்களைச் செய்யின் கன்மபலமாகிய சுகதுக்கங்கள் சேதனமாயுள்ள ஆன்மாவைப்பொருந்துமேயன்றிய சேதனமாயுள்ள சரீரத்தைப்பொருந்தாதெனும் தனதபிப்பிராயந்தோன்ற அருச்சுனன் சடமா முடலையுற்றிடுமோவென்றான்.

---

பூதமைந்தோடைந்துயிர்கள்புலன்கள்பத்துமனமுதனான்
கீதிருமெய்யிதின்மனத்துக்கின்பதுன்பமென்றவரோ
(௨௩)

இ-ள்.

(1) பூதமைந்தோடு-(பஞ்சபூதகாரியமாகிய) தூலசரீரத்தோடு, ஐந்துயிர்கள்-பஞ்சவாயுக்கள், புலன்கள்பத்து-தசேந்திரியங்கள், மனமுதனான்கு-மனமுதலிய அந்தக்கரணசதுட்டயம், ஈது-ஆகியவிவைகள், இருமெய்-இரண்டு சரீரங்களாகும், இதில-இவ்விரண்டு சரீரங்களாகப் பொருந்தியதத்துவங்களில், மனதுக்கு-(தீபச்சுவாலையின் பரம்பரைபோல விருத்திரூபபரிணாமத்தை யடையாநின்ற ஓ

அம்மனத்திலான்மாவபேதம்போற்றோன்றுதலா ல்
விம்முதுக்கசுகத்தைமனமேவுமெனறுசொன்னவ ரோ
(உசா)

## இ.ள்.

அம்மனத்தில் - அநதமனதில, ஆன்மா - ஆத்மாவானது, *அபேதமபோல் - ஒன்றுபோல், தோன்றுதலால்-பிரதிபலித்துத்தோன்றுகின்றமையால, விம்முதுககசுகததை -மிகுதியாயுளள துக்கசுகங்களை, மனமேவுமென்று-மனது பொருநதுமென்று, சொன்னவரோ-கூறியருளியவரோநீ- (எ-று).

*ஆன்மாவுககும மனதுக்கும் ஞானஞேஞானகாலமாகிய வெநதககாலத்திலும் ஏகததுவ மினறெனபது தோன்ற அபேதமாய்ததோன்றுதலெனனுது அபேதம போற்றோன்றுதலெனருர்.

---

அந்தமனோதுக்கசுகமதனிடத்துநில்லாம ல்
வநதிலங்குமான்மாவைமருவியதென்சொல்லுமென (உஎ)

## இ.ள்.

அநதமனோதுக்கசுகம் - அமமனதுக்குரிய சுகதுக்கங்கள், அதனிடதது - அமமனதினிடமாகவே, நிலலாமல-நிற்காமல், இலங்குமான்மாவை-(அறிவுமயமாய் விளங்கிக்கொணடிராநினற ஆத்மாவை, வநதுமருவியதென்-வநதுபொருநதியதெதுபோல, சொலலுமென-தேவரீா கூறவேணடுமென்றருசசுனன் கேட்க, (எ-று).

வெய்யகனலின்சூடுமேல்வைத்தசட்டியி னூ
டெய்யபுனலூடுவநதங்கொன்றுதல்போலென்றவரோ (உஅ)

இ-ள்.

வெய்யகனலின்சூடு - கொடிதாகிய அக்கினியினுஷ்ணமானது, மேல்வைத்த-மேலேவைத்திருக்கப்பட்ட, சட்டியினூடு-சட்டியினுள், *உய் - அ - புனலூடு - விட்டிராநின்ற அந்தச்சலத்தினகணை, வந்தணுகு-வந்தவ்விடத்து, ஒன்றுதல்போல் - பொருந்துதலைப்போல, (மனதின் சுகதுக்கங்கள் மனோசம்பந்தமான ஆன்மாவைப்பொருந்தியது,) என்றவரோ-என்றுகூறியருளியவரோ நீர், (எ-று).

எஞ்சிய-தாஷ்டாந்தங்களை விரித்தாம்.

உய் - என்பது - தன்வினைபிறவினைகளுக்குப் பொதுவாயினும் ஈண்டுபிறவினையை யுணர்த்திநின்றது.

---

சித்தாகுமான்மாவுஞ்செடமாகுஞ்சித்தமும் தா
னொத்தாங்கிரண்டுமொன்றாயுற்றவகைசாற்றுமென (௨௯)

இ-ள்.

சித்தாகுமான்மாவும்-சேதனமாயுள்ள ஆன்மாவும், செடமாகுஞ்சித்தமும்-அசேதனமாயுள்ள மனதும், ஒத்தாங்கு, அபேதம்போல, இரண்டும்-உபயமும், ஒன்றாய-ஏகமாய உற்றவகை-பொருந்தியவிதம், சாற்றுமென-(எங்ஙனம்)சொல்லுமென்றருச்சுனன்கேட்க, (எ-று) தான் அசை

---

வல்லிரும்புகனலுடனேமருவியதுபோன்மன மு
மொல்லையிலான்மாவுடனேயுற்றதுகாணென்றவரோ (௩௰)

இ-ள்.

வல்-வலுமைபொருந்திய, இரும்பு-(தூலமாகவும் அப்பிரகாசமாகவுமிராநின்ற) அயமானது, கனலுடனே-(சூட்சுமமாகவும் பிரகாசமாகவுமுள்ள) அக்கினியுடனே, மருவியதுபோல-(ஏகமாக)ப்பொருந்தியதுபோல, மனமும்-(தூல

மாகவும் அப்பிரகாசமாகவுமிராநின்ற) மனதும், ஆன்மா
வுடனே- (சூட்சுமமாகவுமப்பிரகாசமாகவுமுள்ள) ஆத்மாவு
டனே, ஒல்லையில-அனாதியில், உற்றது-(ஒன்றுபோற்)பொ
ருந்தியது, காணென்றவரோ-நீயறிவாயாகவென்று கூறிய
ருளியவரோ நீர், (எ-று).

---

உற்றதெதனாலெனவேயுள்ளமவிவேகமுறப்
பற்றியதன்மேலுமதன்பண்புவந்ததென்றவரோ (௩௧)

இ-ள்.

உற்றது-(மனதுக்குரிய சுகதுக்க மாத்மாவைவந்து) பொ
ருந்தியது, எதனாலெனவே - யாதினாலென்றருச்சுனன் கே
ட்க, உள்ளம்-மனமானது, அவிவேகமுற-விவேகசூனியத்
தையடைந்தமையால், பற்றிய - அம்மனத்தினைப் பொருந்
திய, தன்மேலும்-(ஆத்மாவாகிய) தன்பேரிலும், அதன்
பண்புவந்ததென்றவரோ அம்மனதுக்குரிய சுகதுக்கங்கள்
வந்து பொருந்தியதென்று கூறியருளியவரோ நீர், (எ-று).

---

அடுத்தகுணம்போமோபின்னான்மாவைவிட்டெனவே
யெடுத்தசெம்பூநிறம்படிகத்தேறுதல்போலென்றவரோ (௩௨)

இ-ள்.

அடுத்தகுணம் - அனாதியாகவே பொருந்தியிராநின்ற சுக
துக்கங்களாகிய குணங்கள், பின் - பின்பொருகாலத்தில்,
ஆன்மாவைவிட்டு - ஆன்மாவைப்பிரிந்து, போமோ-நீங்கு
மோ,எனவே-என்றருச்சுனன்கேட்க, எடுத்த-பற்றியுள்ள,
செம்பூநிறம்-சிவந்தபுட்பத்தினிறமானது, படிகத்தேறுதல்
போல-பளிங்குக் கண்ணாடியிற் (றோற்றமாத்திரமாக) வே
றித்தோன்றுதல்போல, (ஆத்மாவினிடத்திலும் மனதின்
குணங்களத்தியாசத்தாற் றோன்றுகின்றமையின் அவை

யெதார்த்தமல்ல) என்றவரோ-என்று கூறியருளியவரோ நீா, (எ-று).

☞ எடுத்த-என்பதற்கு-இங்கே-பற்றிய-தாங்கிய-தரித்த-எனுமூன்றும் பொருந்துப-தாஷ்டாந்தமெஞ்சி நின்றதால வரிவித்தாம-

(1) அடுத்தகுணமான் மாவைவிட்டு நீங்குமோவென்னுங் கடாவிற்கு புட்பதின் செந்நிறமானது படிகத்திற்றோன்றினும் எதார்த்தத்தி வில்லாதது போல மனதின குணங்களாதமாவினிடத்துத் தோனறினுமெ எதார்த்தத்திலில்லாதிருகக அவைகளாத்மாவினிடத் திருப்பதாகக்கொண்டு) நீஙகுமெனறேனும அலலது நீங்காவெனறேனும் விடைகூறலசங்கதமாகுமாதலின அக்குணங்களாதமாவினிடத்ததியாசததாற தோன்றுகிறதெனவும பொருடோன்றச் செபபுகிறம்படி கதந்தேறுதல போலெனறா-

---

சுத்தபடிகமபோறசொரூபமாயத்தானிருக் ... ... க
மெத்தவுமாசாயவினயேவியதென்சொல்லுமெனை (கக)

இ-ள்.

சுத்தபடிகமபோல்-பரிசுத்தமாகியபளிங்கினைப்போல, சொரூபமாய்த்தானிருகக-சச்சிதானநத சொரூபமாகவே யாத்மாவிருகக, மெத்தவும்-மிகவும, ஆசாமவினம ஆசையாகிய களங்கம, யேவியதென்-(ஆதமாவினிடத்தி) பொருந்திய தெதனலே, சொல்லுமெனை (அதனைதேவரீர்) கூறியருள வேணடுமென்றருச்சுனன்கேட்க, (எ-று).

அறுதியாம்வாசனையாலடைநததாசாமவின ... ம்
மறுபநதமிருககின்முத்திவாராதென்றுணாததவரோ .
(கச)

இ-ள்.

அனுதியாம்வாசனையால் - அனுதியாயுள்ள கரணவாசனை யால, ஆசாமலினம்-ஆசாபாசமாகியகளங்கம், அடைந்தது. வந்துபொருந்தியதாம், மனேபந்தம-(அதுவே)மனதுககுப் பந்தமுமாகும, இருக்கில்-அப்பந்தமிருக்குமானல், முத்தி வாராதென்று-மோக்ஷஞ்சித்திககமாட்டாதென்று, உரை த்தவரோ-கூறியருளியவரோநீ-(எறு).

---

பந்தமெதுமுத்தியெதுபகுத்துரைக்கவேண்டுமென்ற ன்
சிந்தைதெளியவென்றுதிருத்தாளினைவணங்க (ந௫)

இ-ள்.

பந்தமெது-பந்தமென்பதுயாது, முத்தியெது-மோக்ஷமென பதுயாது, எனறன்சிந்தை-எனதுசித்தமானது, தெளிய, $(சந்தேகவிபரீதங்களின்றித) தெளிவையடையும் பொட்டு, பகுத்து-வேறுபிறிதது, உரைக்கவேண்டுமென்று- கூறியருளவேணடுமெனறு, திருத்தாளினை-சிறப்புப்பொரு ந்தியவுபயதிருவடிகளையும், வணங்க-அருச்சுனன்நமஸ்கரிக்க-(எறு).

$ நாமமுதலியவற்றாற் பிறித்தறியாமற் பொருளுணமை மாததிரையாக நிருவிகற்பமாயறிந்த பொருளையிஃதி யா தோவெனவொன்றிற்றுணிவு பெருதாராய்தல் சந்தேகம- அதனையதனேடொபபுமையுடைய வேறுபொருளாக மய ங்கி நிச்சயித்தல் விபரீதம-

---

தேகாதிதானெனவேசேரபிமானங்கள்பந் த
மாகாதமானம்விடலரியமுத்தியென்றவரோ (ந௬)

## இ-ள்.

தேகாதி-தேகேந்திரியாதிகளில், தானெனவே-தானென்பதாக, சேரபிமானங்களை-பொருந்தாநின்ற அபிமானங்களை, பந்தம்-பந்தமாகும், ஆகாத-சுருதிகட்கும் பெரியோர்கட்கு மங்கீகாரமில்லாத, மானமவிடில்-அபிமானத்தைவிட்டு விடில், அரிய-அதுவே யபக்குவர்களாலடைதற் கருமையாகிய, முத்தியெனறவரோ-மோக்ஷமென்று கூறியருளியவரோநீர, (எ-று).

---

அபிமானம்வரும்வகையுமாங்கதுதான்றீர்வகையு ந
தபியாமறனையத்தயவாகக்கூறுமெனை (௩௭)

## இ-ள்.

அபிமானம் வரும்வகையும்-அபிமானம்வந்து பொருந்துகின்றவிதமும, ஆங்கு-அதுபோல, அதுதான்றீர்வகையும்-அவ்வபிமானம் நீங்குகின்றவிதமும், தபியாமல்-தாபமுறாமல, நானறிய-அடியேனறியும்பொருட்டு, தயவாக-கிருபையாக, கூறுமெனை-அனுக்கிரகம்பண்ணவேண்டுமென் றருச்சுனன்கேட்க, (எ-று).

---

மறந்திடுமஞ்ஞானத்தான்மானம்வந்ததஞ்ஞா ன
மிறந்துவிடின்மானமும்போமெனவுரைசெய்தவரோ (௩௮)

## இ-ள்.

மறந்திடும- (ஆத்மாவாகிய தன்னை) மறத்தற கேதுவாகிய, அஞ்ஞானத்தால்-அஞ்ஞானத்தினால், மானமவந்தது அபிமானம் வந்துபொருந்தியது, அஞ்ஞானமிறந்துவிடில்-

அவ்வஞ்ஞானய-நாசமுறுமாயின், மானமும்போமென்ன-அவ்வபிமானமும நீங்கிவிடுமென்று, உரைசெய்தவரோ-கூறியருளியவரோநீர், (எ-று).

---

அந்தமுறையஞ்ஞானமணுகுவதும்போவதுவு    ஞ
சந்தயமில்லாதறியத்தயவாகக்கூறுமென    (௬௯)

இ-ள்.

அந்தமுறை-முற்கூறியகிரமமாகவே, அஞ்ஞானமணுகுவதும்-அஞ்ஞானம்வருதற்கான ஏதுவையும், போவதுவும-நீங்குதற்கானவேதுவையும, சந்தயமில்லாதறிய-ஐயமின்றியானறியும்பொருட்டு, தயைவாக-கிருபையோடு, கூறுமென-சொல்லவேணடுமென்றருச்சுனன்கேட்க-(எ-று), சந்தேகம் சந்தயமெனமரீயது-

---

அஞ்ஞானம்வந்ததனுதியதுசொல்வதல்    லெ
மெய்ஞ்ஞானத்தாலேவிடுமென்றுரைத்தவரோ    (௭௰)

இ-ள்.

அஞ்ஞானம் வந்தது-அஞ்ஞானமொருகாரணத்தால் வந்ததெனச், சொல்வதல்ல-சொல்லத்தக்கதல்ல, அது-அவ்வஞ்ஞானமானது, அனாதி-அனாதியாயுளளதேயாகும,*மெய்ஞ்ஞானத்தாலே-தத்துவஞானத்தால், விடுமென்றுரைத்தவரோ-நீங்கிவிடுமென்று கூறியருளியவரோநீ,(எ-று).

(1) கடத்தினது பிராகபாவமனாதியாயிருக்கினுங் குலாலதண்டக்கிரியையாலதற்கு நாசமுண்டாதல்போல அஞ்ஞானமனாதியாயிருககினு மதற்கு ஞானத்தால் நாசமுண்டாதல சித்தமாதலால் மெய்ஞ்ஞானத்தாலே விடுமென்றார்.

---

இரவியெதிரடுத்துவந்தவிருட்போலவஞ்ஞான    ம்
வரவிதியோசேரிதன்பாலவந்தவகைகயேதெனவே    (௭௧)

இ-ள்.

இரவியெதிரடுத்துவந்த - சூரியன்முன்பாக மருங்கிவந்த, இருட்போல-அந்தகாரம்போல, சோதிதன்பால்-சுயம்பிரகாசமாகிய என்னிடத்து, அஞ்ஞானம்வரவிதியோ-அஞ்ஞானம்வருதற்கு நியாயமுளதோ, வந்தவகை-(வருதற்கு நியாயமில்லாதிருந்தும் நானறியேனென்னு மநுபவந்தோன்ற) வந்திராநின்றவிதம், ஏதெனவே-எதனாலென்றருச்சுனன்கேட்க-(எ-று).

---

அந்தஅறிவுவந்தாலஞ்ஞானமில்லையப்பா ற்
சந்ததமுமானந்தசாகரநீயென்றவரோ (சஉ)

இ-ள்.

(1) அந்தஅறிவுவந்தால் - நான்சுயம்பிரகாசமென்னும் ஞானம உனக்குதயமானால், அஞ்ஞானமில்லை-அஞ்ஞானம உன்னிடத்தில்லாததாகும், அப்பால்-அதற்குப்பின், சந்ததமும்-சதாகாலமும், நீஆனந்தசாகரம் - நீபிரமானந்த சமுத்திரமாகவேயிருப்பாய், என்றவரோ-என்று கூறியருளியவரோநீ-(எ-று).

(1) பிரகாசமாயுள்ளஆத்மாவினிடத்தப் பிரகாசமாகிய வஞ்ஞானம் வந்திருப்பதெதனாலெனனுங்கடாவிற்கு அந்த அறிவுவந்தாலஞ்ஞானமில்லையென்றமையால்-நான்சுயம்பிரகாசமென்னும் †அதிஷ்டான ஞானமுதயமாதற்குப் பூர்வம பிரகாசமாகிய சந்திரனிடத்தப் பிரகாசமாகிய களங்கமநாதியாகவேயிருந்தல்போல பிரகாசமாகிய ஆத்மாவினிடத்தப் பிரகாசமாகிய வஞ்ஞானமநாதியாகவேயுள்ளதன்றியிடையில் யாதானுமோர் காரணத்தால் வந்ததன்றென்பதேவிடையென வூகித்துணர்க.

†யாதொன்று நிருவிகாரமாகவும் அவித்தையாற் செய்யப்

பட்ட கற்பிதகாரியங்கட்காசிரயமாகவுமிருக்கிறதோ-அது அதிஷ்டானமாகும்-திருஷ்டாந்தம்-கற்பிதசற்பத்துக்கு-இரசுசு. அதிஷ்டானம.

---

வேதாந்தத்தாற்குருவான்மெய்ஞ்ஞானம்வந்தவுட ன்
றீதானதுக்கசுகந்தீராததேதெனவே (சரு)

இ-ள்.

வேதாந்தத்தால - வேதாந்தசாஸ்திர சிரவணத்தினாலும, குருவால் - ஆசாரியருபதேசத்தினாலும், மெய்ஞ்ஞானம-தத்துவஞானம், வந்தவுடன்-உதயமான உத்தரக்ஷணமே, தீதானதுக்கசுகம் - கொடிதாகியசுகதுக்கங்கள், தீராததே தெனவே-நீங்காததெததனலென்றருச்சுனன்கேட்க,(எ-று).

---

பற்றறுமோதுக்கசுகம்பரோக்ஷஞானத்தா ... லே
யற்றமாமவ்விரண்டுமபரோக்ஷத்தெனறவரோ (சச)

இ-ள்.

பரோக்ஷஞானத்தாலே-பரோக்ஷஞானததால், துக்கசுகம-சுகதுக்கங்களாகிய, பற்றறுமோ - பற்றுக் கணசமாமோ (ஆகாமற்றெதனனசமாமெனின்), அவ்விரண்டும்-அவ்விரணடுபற்றுக்களும, அபரோக்ஷதது அபரோக்ஷ ஞானத் *தால், அற்றமாம்-நாசமாகும, என்றவரோ-எனறுகூறிய ருளியவரோநீர், (எ-று).

*ஆல் என்னும கருவிப்பொருளுணாதது மூனறனுருபு விரிக்கப்பட்டது.

பரோக்ஷமபரோக்ஷமெது பகுத்துரைக்கவேண்டுமென்றன்
றிரோதமாம்புத்திநன்றாய்த்தெளிவுபெறுமாறெனவே
(சரு)

இ-ள்.

பரோக்ஷமபரோக்ஷமெது - பரோக்ஷ ஞானமென்பதியாது அபரோக்ஷஞானமென்பதியாது, எனதன்-என்னது, திரோதமாம்புத்தி-மயக்கம்பொருந்தியபுத்தியானது, நன்றாய்-நன்றாக, தெளிவுபெறுமாறு - தெளிவையடையும்பொருட்டு பகுத்துரைக்க வேண்டும்-வேறுபிரித்துக் கூறவேணடும், எனவே-என்றருச்சுனன்கேட்க, (எ-று.)

---

பகர்ந்தசத்தஞானம்பரோக்ஷமனுபவத் தா
லகம்பிரமமெனுஞானமபரோக்ஷமென்றவரோ (சசு)

இ-ள்.

பகர்ந்த (அசத்தாவரணவிரோதியெனச்) சொல்லிய, சத்த ஞானம்-சாஸ்திர ஜன்ய ஞானமானது, பரோக்ஷம்-பரோக்ஷஞானமாகும், அனுபவத்தால்-சுவானுபவததால், அகம்பிரமமெனு ஞானம-நான் பிரமமெனனும ஞானமானது, அபரோக்ஷமென்றவரோ-அபரோக்ஷஞானமென்று கூறியருளியவரோநீர், (எ-று)

---

தான்பிரமமென்றறிந்துந்தனுவைத்தானென்றபுத் தி
யேன்போகவில்லையதையெனக்கறியப்புகலுமென (சஎ)

இ-ள்.

தான்பிரமமென்றறிந்தும்-அகம்பிரமமென்றறிந்தும், தனுவை-தேகேந்திரியாதிகளை, தானென்றபுத்தி-அகமென்னும புத்தியானது,ஏன்போகவில்லை-எதனானீங்கவில்லை,அதை-

(நீங்காதிருத்தற்குள்ள) அக்காரணத்தை, எனக்கறிய-அடியேனுக்கறியும்பொருட்டு, புகலுமென-கூறியருளவேண்டுமென்றருச்சுனன்கேட்க, (எ-று).

கேள்வியினான்மனனத்தாற்கிளர்ந்தயோகங்களினு
லாளபிரமத்தனுபவம்வந்தது தீருமென்றவரோ (௩௮)

(இ)-ள்.

*கேள்வியினால் - சாஸ்திரசிரவணத்தினாலும், †மனனத்தால் - அர்த்தமனனத்தினாலும், ‡கிளர்ந்த $யோகங்களினால்-விளங்காநின்றதியானயோகங்களினாலும், || ஆள-முயற்சித் (தடையத்தக்க) பிரமத்தனுபவம்வந்தது-பிரமானுபவமுதயமாகியபின், அது-அந்தசோகமென்னும் புத்தியானது, தீருமென்றவரோ - நீங்குமென்றுகூறியருளியவரோநீர், (எ-று).

|| ஆள-ஆள்பது-முயற்சி

* சற்சாஸ்திரார்த்தங்களைக் குருமுன்னிலையிற சடுவிதலிங்கதாற் பரியமாகச்சிரவணஞ் செய்தலைக்கேளவியெனறூர்.

†சிரவணப்பொருளைத் தானுயினும் தனக்கொத்த சாதுசங்கங்களோடாயினுஞ் சுருதிதாற்பரியமாகத் தர்ககயுத்தியனுமானங்களோடு சிந்தித்தலைமனனமென்றூர்.

‡மனனத்தா னிச்சயித்த பொருளையதுவேநான் நானேயதுவெனததயிலதாரைபோல நிரந்தரம நெடுங்காலம் நேயத்தோடுசாதிவிருத்திப்பிரவாக ரூபமாகத்தியானிக்கினறநிதித்தியாசனத்தை யோகமென்றூர்

‡ தியானபரிபாகமாகிய சமாதியில் தியானவஸ்துவாகிய பரமாத்மாதன மயமாகவிளங்குதலின் கிளர்ந்தயோகமென்றார்

---

ஆதியாஞ்சிற்சொரூபமாகாததானினிமே ... ற
சோதிமனனாதியினாற்சொரூபமாமோவெனவே (௪௯)

இ-ள்.

ஆதியாம-முதன்மையாகிய, சிற்சொரூபம்-சின்மாத்திரசொரூபம, ஆகாததான-(முன்னமே) ஆகாதிருக்கப்பட்டஆன்மா, இனிமேல்-பின்னர், சோதிமனனாதியினால், விசாரிக்கின்ற-மனனமுதலியவைகளால், சொரூபமாமோ - (சின்மாத்திரசொரூபமாகுமோ, எனவே-என்றருச்சுனன் கேட்க, (எ-று).

---

எப்போதுஞ்சின்மயந்தானெனன்மறந்துதேடுவ து
சேப்புமிடற்றணியிருக்கத்தேடுதல்போலென்றவ ரோ
(௫௰)

இ-ள்.

எப்போதும-எந்தக்காலத்தும, சின்மயம்-சின்மாத்திரசொரூபம, தானெனல்-தானென்பதை, மறந்து-அயர்ச்சித்து, தேடுவது-(அடையவேண்டுமெனத்)தேடுகின்றது, செப்புமிடற்று-சொல்லாநின்றகண்டத்து, *அணியிருக்க - (கண்டாபரணமிருக்கும்போது, தேடுதல்போலென்றவரோ-(கண்டாபரணமெங்குற்றதோவென)த்தேடுகிறதற்குச் சமானமாகுமென்று கூறியருளியவரோநீர், (எ-று).

*அணியென்பது-இடுவன, தொடுவன, கட்டுவன, கவிப்பன, முதலிய ஆபரணங்கள பலவற்றிற்கும் பொதுப்பெயர

தேடியபின்றேகபுத்திதீர்ந்துபோய்ச்சிற்சொருப ங்
கூடுவனேயானென்குறைதீரச்சொல்லுமென (௩௧)

## இ-ள்.

தேடியபின்-மனனாதிகளாற்றேடியபிற்பாடு, தேகபுத்திதீர்ந்துபோய்-தேகோகமென்னும் புத்தியானது கெட்டொழிந்து, சிற்சொருபம்-சின்மாத்திரசொரூபத்தை, (1) கூடுவனேயான் - யானடைவனே, என்குறைதீர - எனது குறைவானது நீங்கும்படி, சொல்லுமென-கூறியருளவேண்டுமென்றருச்சுனன்கேட்க, (எ-று).

(1) கூடுவன்-இதில் அன்விகுதிதன்மையிடத்துவந்தது

---

வந்தவுடல்வேறாயும்வாசனையாற்றானெனலா ற்
சந்தயமென்றற்சொருபந்தானுதற்கென்றவரோ (௩௨)

## இ-ள்.

வந்தவுடல்-(கன்மத்துக)கேதுவாக வந்திராநின்ற சரீரமானது, வேறாயும-அன்னியமாயிருந்தும், வாசனையாற்-(பழககத்தாற்பொருந்திய)மலினவாசனையினால், தானெனலால-(அதனைத்)தானென்று கூறுதலால், தற்சொருபந்தானுதற்கு-தன்னுடையசொரூபந்தானுதற்கு, சந்தயமென்-ஐயமாயிருக்கின்றது, என்றவரோ-என்று கூறியருளியவரோ நீர், (எ-று). சந்தேகம் சந்தயமெனமரீயது.

---

தனுவைத்தானெனும்பிரமைசத்தஞானத்தில ற
தனுபமெய்ஞ்ஞானத்தாலறும்வகையேதுாயுமென (௩௩)

## இ-ள்.

தனுவைத்தானெனும்பிரமை - தேகத்தைத்தானென்னும பிராந்தியானது, சத்தஞானத்திலறு து - சாஸ்திரஜன்னிய

